கம்பௌண்டர்கள், நர்ஸுகள் இவர்களின் எண்ணிக்கை முன்னால் இருந்த படியேதான் இருந்துகொண்டிருக்கிறது. ஆகவே இதையும் அதிகப் படுத்துவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுவது உண்மைதான். ஆனால் இப்போது படுக்கைகளும் நான்கு மடங்காகி இருக்கிறது. முன்பு 22 பெட்களாக இருந்தது இப்போது 80 பெட்களாக ஆகியிருக்கிறது.

*Silk Farm*

* 220 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state the stage at which the establishment of a silk worm industry at Tenkasi in Tirunelveli district is?

THE HON. SRI R. VENKATARAMAN : An extent of 1·60 acres of land belonging to a private party has been selected and occupied on 14th June 1958 pending acquisition under the Land Acquisition Act, for the establishment of a Demonstration Silk Farm at Tenkasi. Mulbarry grafts, sapplings and cuttings have been planted.

SRI K. SATTANATHA KARAYALAR : தற்சமயம் மல்பரி மரங்கள் மாத்திரம் வைக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. அடுத்ததாக ஒரு வீவிங் பிளாண்ட் ஆரம்பிப்பதற்குச் சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போதுதான் மல்பரி மரங்கள் வைக்கப்பட்டிருக்கிறது. இவைகள் எல்லாம் வளர்ந்து, அதி லிருந்து பட்டுப்பூச்சிகள் வளர்ந்து அதிலிருந்து பட்டு நூல்கள் கிடைக்கக் கூடிய நேரத்தில்தான் இந்த வீவிங் பிளாண்ட்டைப்பற்றி ஆலோசிக்க வேண்டும்.

SRI K. SATTANATHA KARAYALAR : இதற்கு எவ்வளவு காலம் ஆகும் என்பதைத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதைப்பற்றிப் பின்னால் தான் சொல்ல முடியும்.

*Godavari and Krishna waters*

* 221 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1-6-58-ல் உதகையில் கூடிய தென் மண்டலக் கவுன்ஸிலில் கோதாவரி, கிருஷ்ணா தண்ணீரைத் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வர ஆலோசிக்கப்பட்டதா ?

(ஆ) அப்படியாயின் அதன் முடிவு என்ன ?

THE HON. SRI P. KAKKAN : (அ) இல்லை ஐயா.

(ஆ) இக் கேள்வி எழாது.

SRI S. M. ANNAMALAI : தலைவர் அவர்களே, இந்த கோதாவரி, கிருஷ்ணா தண்ணீரைத் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வந்தால் வட ஆற்காடு, செங்கல்பட்டு முதலிய மாவட்டங்களுக்குத் தண்ணீர் வசதி கிடைக்கும் என்ற காரணத்தால் இதற்காக ஆந்திரா அரசாங்கத்தோடு கலந்து இதை உடனடியாகக் கொண்டு வருவதற்கு இந்த அரசாங்கம் முயற்சிக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : சமீபத்தில் ஹைதராபாத்தில் நடந்த ஸோனல் கவுன்ஸிலில் கலந்துகொண்ட ஆந்திர முதல் மந்திரி அவர்களே இந்தத் தண்ணீரை சென்னை ராஜ்யத்திற்குக் கொடுப்பதற்கு முன் வந்திருப்ப